ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2037
மார்கழி - டிசம்பர் 2006

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்



நெஞ்சில் முள்ளாய்
முல்லைப் பெரியாறு அணை

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

| | |
|---|---|
| திருவள்ளுவராண்டு 2037 (விய) | மாதம் : மார்கழி |
| மலர் : [illegible] | இதழ் : 12 |



# நெஞ்சில் முள்ளாய் முல்லைப் பெரியாறு அணை

முல்லைப் பெரியாறு அணைப் பிரச்சனை தமிழக - கேரள மாநிலங்களின் நல் உறவுக்கும், நல் இணக்கத்திற்கும் அறைகூவல் விடும் பிரச்சனையாக வளர்ந்து வருகின்றது. அடிமை இந்தியாவில் எழுப்பப்பட்ட அணையின் நீர்க் கொள்ளளவு சுதந்திர இந்தியாவில் பிரச்சனைக்குரியதாக பேசப்படுகின்றது. இந்த அணை எழுப்பப் பட்ட நிகழ்வே கண்ணீரும் செந்நீரும் சிந்திய வரலாறு! இந்தியாவைத் தங்களின் ஏகபோகச் சுரண்டலின் வேட்டைக்காடாய் நினைத்த வெள்ளையர்கள் உண்டு! தாம் பிறந்த தாய் மண்ணைவிட இந்திய மண்ணை ஈர உள்ளத்தோடு நேசித்த அபூர்வமான வெள்ளை மனிதர்களும் உண்டு! அந்த அபூர்வ மனிதர்களின் வரிசையில் மகத்தான மனிதர்தான் இங்கிலாந்து நாட்டைச்சேர்ந்த பென்னிகுக். இங்கிலாந்தில் 1825 ஜனவரி 24-ல் பிறந்து ராயல் இன்ஜினியரிங் பொறியியல் பட்டப்படிப்புப் படித்து ராணுவப் பயிற்சி பெற்று இந்தியாவில் - தமிழகத்தில் கண்காணிப்புப் பொறியாளராய்ப் பணியாற்றினார். அடிக்கடி சீறிப்பாயும் கரைபுரண்டு ஓடும் பெரியாற்றின் வெள்ளப் பெருக்கை வீணாக்காமல் ஒரு நீர்த் தேக்கத்தைக் கட்டி, நீரைக் குகையின் (Tunnel) மூலம் வறண்ட தென் தமிழகத்திற்குத் திருப்பிவிட்டால் நீர்ப்பாசன வசதியில் வறண்ட தென்தமிழகம் வளம் பெறும் என்ற அரிய சிந்தனை பென்னிகுக் மூளையில் கருக்கொண்டது.

திருவாங்கூர் மன்னருக்கும், பிரிட்டிஷ் அரசுக்கும் 999 ஆண்டு கால ஒப்பந்தம் 1886 அக்டோபர் 29-ம் நாள் கையெழுத்தாயிற்று! ஒப்பந்தம் விரைவாய் கையெழுத்து ஆன அளவிற்கு அணை கட்டும்

பணி எளிமையான பணியாய் இல்லை! அணை கட்டும் பணி மிகப்பெரிய சவாலாகவே இருந்தது. கல்லாலும் மண்ணாலும் மட்டும் இந்த அணை எழுப்பப்படவில்லை; விலை மதிப்பில்லா உயிர்களின் கல்லறைகளின் மீது இந்த அணை எழுப்பப்பட்டுள்ளது. போக்குவரத்து வசதி, சாலை வசதி, மின்சாரவசதி இல்லாத காலகட்டத்தில் விஷ ஜந்துக்களும் கொடிய மிருகங்களும் உள்ள அடர்ந்த காட்டுக்குள் எழுப்பப்பட்ட அணையின் வரலாறு கண்ணீர்க் கதை தான்.

அணை எழுப்புகின்ற கட்டுமானப் பணியில் ஈடுபட்டோரில் காலராவில் பலியானோர் 52 பேர், யானை மிதித்து இறந்தவர்கள் 158 பேர், புலி அடித்து மாண்டவர்கள் 48 பேர், விஷவண்டு தாக்குதலுக்கு பலியானவர்கள் ஏராளம்! இவை எழுதிவைக்கப்பட்ட அவல மரணங்கள். எழுதப்படாத மரணங்கள் ஏராளம்! ஏராளம்! இவ்வளவு போராட்டங்களுக்கு இடையே அணை நிறைவுபெறும் தருணத்தில் வெள்ளப் பெருக்கில் அணை உடைந்து விடுகின்றது. விரக்தி அடைந்த பிரிட்டிஷ் அரசு இந்தத் திட்டத்தைக் கைவிட்டுவிடும்படி பென்னிகுக்கிற்கு ஆணை இட்டது. பென்னிகுக் தம் சொந்த மண்ணிற்கு (லண்டனுக்கு)ச் சென்று தம் எல்லாச் சொத்துக்களையும் விற்றுவிட்டு, அந்தப் பணத்தில் மீண்டும் அணை கட்டும் பணியைத் தொடங்கினார். ஏறத்தாழ 9 ஆண்டுகால போராட்டத்திற்குப் பிறகு 1895-ம் ஆண்டில் அணை கட்டிமுடிக்கப் பட்டது. இந்தியாவைச் சுரண்டிய வெள்ளையர்கள் நடுவே தம் சொந்தப் பணத்தைக் கொண்டு முல்லைப் பெரியாறு அணையைக் கட்டிய பென்னிகுக் மனிதருள் மகத்தானவர்தானே! முல்லைப் பெரியாறு அணையின் பாசன விவசாயிகள் நன்றியுடன் என்றும் நினைக்க வேண்டிய மகத்தான மனிதர் பென்னிகுக்தானே!

சிக்கலின்றி இயங்கிய முல்லைப் பெரியாறு நீர்த்தேக்கத்தில் 1979-ம் ஆண்டு புதிய ஒப்பந்தம் தமிழகத்திற்கும் கேரள அரசுக்கும் இடையே ஏற்பட்டது. கடந்த 27 ஆண்டுகளாக பெரியாறு அணையின் முழு நீர்மட்டம் 152 அடியில் இருந்து 136 அடியாகக் குறைக்கப்பட்டு விட்டது. நீரில் மூழ்கும் நிலம் 8000 ஏக்கராக இருந்தது 4677 ஏக்கராக குறைந்துவிட்டது. வெளிப்பட்ட நிலங்களை கேரள அரசு சுற்றுலா வளர்ச்சி என்ற பெயரில் கையகப்படுத்தி உள்ளது. தற்காலிகமாக 136 அடியை தேக்கிவைக்க எடுக்கப்பட்ட ஆலோசனையை நிரந்தரமான

முடிவாய் கேரள அரசு பிடிவாதமாய் வலியுறுத்துகின்றது. அறிவியல் தொழில் நுட்பச் சோதனைகளில் எல்லாவகையிலும் பலமாய் உள்ள அணையில் நீர்தேக்கி வைப்பதில் உடும்புப் பிடியாய்ப் பிடிவாதம் பிடிக்கும் கேரள அரசின் பிடிவாதப்போக்கு தளரவேண்டும்! 29-11-2006 அன்று தில்லியில் நடைபெற்ற பேச்சுவார்த்தையில் தமிழக முதல்வர் மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்கள் அரசியல் முதிர்ச்சியோடும், நியாயமாகவும், நேர்மையாகவும், நிதானமாகவும், தோழமை உணர்வோடும் வைத்த வேண்டுகோளை கேரள அரசு ஏற்க வேண்டும்!

உலக மானுடத்தை சாதி, மொழி, சமயம் நாடு என்னும் எல்லைகளுக்குள் அடைக்காமல் சமத்துவமாய் பார்க்கின்ற பொது உடைமைத் தத்துவத்தை ஏற்றுக் கொண்டிருக்கின்ற கேரள அரசு, குறுகிய எண்ணத்தோடு செயல்படுவது இந்தியாவின் கூட்டாட்சித் தத்துவத்திற்கு அறைகூவல் விடுப்பதாய் உள்ளது. இந்தியரும், வெள்ளையரும் கண்ணீராலும், செந்நீராலும் உப்புநீராலும் குழைத்து எழுப்பிய முல்லைப் பெரியாறு அணையை நம்பி வாழ்வாதாரத்தை நகர்த்திக் கொண்டிருக்கும் வறண்ட தென் தமிழகத்து மக்களின் வாழ்வைக் காப்பாற்ற உச்சநீதி மன்றத் தீர்ப்பை நிறைவேற்றிட நடுவண் அரசும் விரைந்து செயல்பட வேண்டும். முல்லைப் பெரியாறு அணைப் பிரச்சனையில் தமிழக அரசும், நம் மாண்புமிகு முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்களும் தம் நிலைப்பாட்டைநிதானமாகவும், நியாயமாகவும், நேர்மையாகவும், உண்மையாகவும், தோழமை உணர்வோடும் விரைந்தும் செயல்படுவது பாராட்டுக்குரியது.

"முல்லைப் பெரியாறு அணை நீர்தேக்கும் பிரச்சனையில் தங்களையே அர்ப்பணித்து பணியாற்றும் முல்லைப் பெரியாறு, வைகை நீர்ப்பாசன விவசாயிகள் பொதுச் சங்கப்பணியும் சங்கச்செயலர் கே.எம். அப்பாஸ் அவர்களின் பணியும் பாராட்டுக் குரியது. விட்டுக் கொடுத்தலில்தான் மனித குலத்தின் வெற்றி அடங்கியிருக்கின்றது". என்பதை அச்சுதானந்தன் போன்றவர்கள் உணரும்நாள் எந்நாளோ?" நம் விழிகளின் நீருக்குள் சிறையிருக்கும் கண்ணியம் மிக்க, போற்றுதலுக்குரிய பென்னிகுக் உணர்வுகளை போற்றிக் காப்போம்!

பொன்னம்பல அடிகளார்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 70. மன்னரைச் சேர்ந்தொழுகுதல்

மண்ணாளும் அரசர்களைச் சேர்ந்து ஒழுகும் நெறிமுறைகளை விளக்குவது இந்த அதிகாரம். அரசர்களிடம் - இன்று உயர் பதவியிலிருப்பவர்களிடம் ஒழுகுதல் என்று எடுத்துக்கொண்டாலும் பிழையில்லை. உயர்நிலையிலிருப்பவர்களுடன் பழகுதல் ஒரு கலை. இந்நிலையில் கைவந்தவர்கள் எண்ணிய முடிப்பர். யாதொரு இடர்ப்பாடும் இவர்களை அணுகாது.

*அகலாது அணுகாது தீக்காய்வார் போல்க*
*இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.* (691)

தீயினை விட்டு விலகினால் குளிரும்; மிகவும் நெருக்கமாக அணுகினால் சுடும். அரசரைவிட்டு அகன்று ஒழுகினாலும் தீங்கு. அணுகி நின்றாலும் தீங்கு.

அரசரை அணுகி நின்றொழுகுதல், அகன்று நின்றொழுகுதலைவிட மிக்க துன்பம் தரும்.

அரசு அதிகாரம் எதுவும் செய்யவல்லது. அரசு அதிகாரத்தின் அங்கீகாரமின்றி வாழ்தல் இயலாது என்ற அளவுக்கு அரசு அதிகாரம் குடிமக்கள் மீது ஆதிக்கம் கொண்டுள்ளது. இஃது மீண்டும் ஒரு புதுவகையான அடிமைத்தனத்தை அறிமுகப்படுத்துவதாகும்.

மார்கழிக் கடுங்குளிருக்கு, தீயின் அருகில் உட்கார்ந்து தீக்காய்வர் பலர். தீக்காய்வாருக்கும் தீக்கும் உள்ள தூரம் நெடிதும் அன்று. அணுக்கமும் அன்று. தீயை மிக அணுகினாலும் சுடும். தீயை விட்டு அகன்றாலும் குளிர் வருத்தும். அதுபோல அரசை மிக நெருக்கமாக அணுகினாலும் அரசின் ஆணை துன்புறுத்தும். அரசின் கவனத்தை விட்டு நெடுந்தூரம் விலகினாலும் அரசு ஐயப்பட்டுத் துன்புறுத்தும். அரசு துன்புறுத்தாது ஒழிந்தாலும் பகைவர் துன்புறுத்துவார் என்று உணர்க.

*மன்னர் விழைப விழையாமை மன்னரால்*
*மன்னிய ஆக்கம் தரும்.* (692)

அரசர்கள் விரும்புவனவற்றை விரும்பாதிருப்பின் அரசரால் நிலைத்த ஆக்கம் தரும்.

மன்னர் விரும்பும் புகழ், பெருமை, அதிகாரம், பெண் ஆகியவற்றை அமைச்சர்கள் விரும்பக் கூடாது என்பது கருத்து.

*போற்றின் அரியவை போற்றல் கடுத்தபின்*
*தேற்றுதல் யார்க்கும் அரிது.* (693)

போற்றுகின்ற நிலையில் அரியவற்றைப் போற்றுக. போற்றா தொழியும் நிலையில் யாராலும் தேற்ற முடியாது.

போற்றிப் பேணவேண்டிய நிலையிலும் தாழ்ந்து போனால் என்ன செய்வது? யாராலும் தேற்ற முடியாது என்பது முடிவு.

*செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்துஒழுகல்*
*ஆன்ற பெரியார் அகத்து.* (694)

அரசர் முன்பு இரகசியம் பேசுதலும், நகைத்து விளையாடலும் தவிர்த்திடுதல் வேண்டும்.

இரகசியத்தைச் "செவிச்சொல்" என்றார். கேட்கும் ஒருவர் காதில் மட்டுமே புலன் ஆவதால் செவிச்சொல் என்றார். பலர் கூடியுள்ள அவையிலும் பலர் பணி செய்யும் அலுவலகங்களிலும் கூடச் செவிச் சொல் தவிர்க்கப்படுதல் வேண்டும். நகைத்து விளையாடுதல் அறவே கூடாது.

*எப்பொருளும் ஓரார் தொடரார்மற்று அப்பொருளை*
*விட்டக்கால் கேட்க மறை.* (695)

அரசர் ஒருவரிடம் செவிச்சொல்லாகப் பேசும் செய்தியைத் தாமே முயன்று கேளார். அரசரைத் தொடர்ந்து மற்றவரிடம் பேசிய செவிச் சொல் பற்றிக் கேட்கவும் மாட்டார். அரசன் தானே தம்மிடம் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லும்பொழுது மட்டுமே கேட்கவும். மற்றவர்கள் செவிச்சொல்லாகப் பேசிக்கொள்வனவற்றைக் கேட்டறிய முற்படுவது தவறு. (அதாவது ஒட்டுக் கேட்டல்)

இருவர் செவிச் சொல்லாகப் பேசிக்கொண்டதைக் கேட்டறிய முயற்சி செய்வதும் தவறு.

*குறிப்பறிந்து காலம் கருதி வெறுப்புஇல*
*வேண்டுப வேட்பச் சொலல்.* (696)

அரசனது காரியங்களைச் செய்யும்பொழுது அவன் குறிப்பினை அறிந்து காலங்கருதிச் செய்ய வேண்டும். அரசன் வெறுப்புக்

காட்டுபவை வேண்டாம். அரசன் விரும்பிக் கேட்கத்தக்க வகையில் சொல்லும் பண்பு வேண்டும்.

*வேட்பன சொல்லி வினையில எஞ்ஞான்றும்*
*கேட்பினும் சொல்லா விடல்.* (697)

அரசன் விரும்பக்கூடிய பயனுடையனவற்றையே சொல்லுக. பயனற்றவற்றை அரசன் விரும்பிக் கேட்டாலும் சொல்லுவதைத் தவிர்த்திடுக.

பயனுடையவற்றை விரும்பிக் கேட்காது போனாலும் விருப்பம் உண்டாக்கும் வகையில் சொல்லுக என்பது கருத்து.

*இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற*
*ஒளியோடு ஒழுகப் படும்.* (698)

ஆள்வோர் தமக்கு இளையர் என்றும் இனவழி உறவினர் என்றும் உறவும் உரிமையும் கொண்டாடுவதன் மூலம் ஆள்வோரை அவமதிக்காது அரசின் ஆட்சி ஒளியோடு ஒன்றித்துப் பழகுதல் வேண்டும்.

அரசின் ஆட்சிமுறையே மிக்குயர்ந்தது. ஆதலால் "ஒளி" என்றார்.

ஆள்வோர் உறவையும் நட்பையும் கூட்டிக் காரியங்கள் செய்வதே நேற்றும் இன்றும் நடைமுறை.

*கொளப்பட்டேம் என்றுஎண்ணிக் கொள்ளாத செய்யார்*
*துளக்குற்ற காட்சி யவர்.* (699)

அரசின் ஆதிக்க எல்லையில் கொள்ளப்பெற்றமையை எண்ணி, ஆள்பவர் விரும்பாதவற்றைச் செய்யமாட்டார்கள். நிலையான அறிவினை உடையவர்கள்.

"அதிகாரம்" நிலையானது அல்ல. ஆதலால், அதிகாரத்தில் இருக்கும் பொழுது விழிப்பாக இருப்பர் அறிவுடையோர்.

*பழையம் எனக்கருதிப் பண்புஅல்ல செய்யும்*
*கெழுதகைமை கேடு தரும்.* (700)

அரசனிடம் பழகிய பழக்கம் உடையோம் எனக்கருதிப் பண்பல்லாதவனவற்றைச் செய்யும் பொழுது - உரிமையுடன் பணிகளைச் செய்யும் பொழுது உரிமைக்குக் கேட்டினைத் தரும்.

உயர்ந்தோரிடம் நாம் கொள்ளும் பழக்கங்கள் வழி உளவாகும் உறவு. உறவுக்காகவே; உரிமைக்காகவல்ல என்று எண்ணிப் பழகுதல் நன்று.

*(தொடரும்)*

# "வழிபாடு"

சமய நெறியில் வழிபாடு என்பது வரையறுத்துச் சொல்ல இயலாக் காலத்து முகிழ்த்து, அரும்பி, போதாகி, மலர்ந்து பரிணமித்து பரிமளித்தது. அளவைகளால் அளந்து, யாரும் உரிய எல்லைக்குட்பட்டு நிலைநிறுத்தியதன்று.

சங்க நூல்களும், நீதி நூல்களும், காப்பியங்களும் தொட்டுக்காட்டிய வழிபாட்டு நெறியைப் பக்தி மார்க்கப் பனுவல்கள் விரித்துரைத்ததைச் சாத்திரங்கள் விதிகள் ஆக்கி நிலைப்படுத்தின. ஆயினும் புராணங்கள், சிற்றிலக்கியங்கள் ஆகியவற்றை ஆழ்ந்து நோக்கின் இன்னதென நிலைப்படுத்தி, வகைப்படுத்தி, விவரித்துச் சொல்ல இயலாத நிலையில் பல்கியதாக, பரந்துபட்டதாகவே "வழிபாடு" எனும் அமைப்பு நிலவுவதைக் காண முடியும்.

கல்லால் எறிந்ததும், சொல்லால் வசை மொழிந்ததும், வில்லால் அடித்ததும், கூடப்பெருமானால் உவந்தேற்கப்பட்டன. உயர்த்திப் பேசப்பட்டன. உலகுக்கு என்றும் நிலைத்த வரலாறாகப் பகரப்பட்டன.

ஆகமமும் ஏற்கப்பட்டது. நெறியறியா வழிபாடும் விரும்பப்பட்டது. வாதாடியதும் சூதாடியதும் ஒன்றாய்க் கருதப்பட்டன.

இவ்வாற்றான் சிதறல்களாயிக் கிடக்கும் இறை வழிபாட்டு நிகழ்வுகளை, வாக்குகளை, ஒருங்கு வைத்துப் பார்க்கையில் என்ன அறிய ஒண்ணும்? ஒன்றே ஒன்றுதான். நெறி முக்கியமில்லை. நெஞ்ச நெகிழ்வு முக்கியம். குறியும் அடையாளமும் பிரதானமில்லை. கொண்ட கொள்கையில் உறுதிப்பாடே முதன்மை. "எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னிய சீர்ச் சங்கரன் தாள் மறவாமை ஒன்றே பொருள்" - என்று சேக்கிழார் மொழிந்ததுவே மெய்ப்பொருள். "அன்பு நாரா அஞ்செழுத்து நெஞ்சு தொடுக்க" - எனப்பூத் தொடுக்கும் போதும் "நா" அஞ்செழுத்தைத் தொடுப்பதும் வழிபாடே.

பல்கிப் பெருகும் வழிபாட்டு நெறியைத் தொகுத்துப் பிழிந்து சாறெடுத்தால், என்ன நிலைப்படும்? சங்கப் பனுவலின் முதற்பா விதந்து மொழிவது ஒன்றே பொதுவானது. அது என்ன? "வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட" என முருகாற்றுப்படை மொழிவதே அது; வேட்கை எனும் வேர்ச் சொல்லிலிருந்து வேண்டுநர். வேண்டி எனும் சொற்கள் விரிவடைந்தன.

ஆழ்ந்த அன்பு, அகலாத பற்றுதல், மாறாக பக்தி, எதிலும் இறைமையையே சிந்திக்கும். பேசும் பாங்கு இவையே அடிப்படை. அதில் எழும்பும் வழிபாட்டு முறைக்கு முக்கியத்துவம் இல்லை. முகிழ்த்த, முழுமைப்பட்ட, அன்பேகளன். அதுவே பரமனால் பரிந்தேற்கப்பட்டது. "வேண்டுநர், வேண்டியாங்கு வழிபட" என்பது ஆழ்ந்த பொருள் நுட்பம் செறிந்த தொடர்.

சிவ சிவ

நன்றி : "குமரகுருபரன்" 17.11.2006
தலையங்கம்

# திருமுறைத்தமிழ் உருவாக்கிய மருதுபாண்டியர் மாண்புகள்

**(தா. குருசாமி தேசிகர்**, மதுரை)

"மனிதப் பிறப்புத் துன்பமாயினும் பெரியோரைச்
சிநேகித்தால், அப்பிறப்பை வெறுக்கார்"

என்று நீதிமொழியாக நினைவு கூர்கின்ற நாலடியார் வாக்கியம்,

"இனித்தமுடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இம்மாநிலத்தே"

என்று அப்பர் தமிழ் வாக்கியத்தால் "மடை மாற்றம்" நிகழ்ந்தது. திருமுறைத்தமிழ்வாணர் தொடர்பும், திருநெறி உணரும் வாய்ப்பும், நல்லூழ் காரணமாக, மருது சகோதரர்க்கு வாய்த்த வரலாற்றை ஆராய்வதே இக்கட்டுரை.

## மருது சகோதரர் தாரபகம்

விருதுநகர் மாவட்டம் - நரிக்குடி - முக்குளம் கிராமத்தில் கி.பி.1743ல் மொக்கப்பழனிசேர்வை, ஆனந்தாயி பொன்னாத்தாளுக்கு முன்பின்னாகப் பிறந்தவர்கள் மருது சகோதரர்கள். இவர்கள் இருவரும், பக்கத்திலுள்ள கல்லுமடை திருநாகேசுவரமுடையார் சிவாலயத்தில் தங்கி, தமது ஆன்மார்த்த பரார்த்த பூஜைகளை செய்து வந்த சிவகுருநாத ஓதுவாரிடம், தமிழறிவும் சமய உணர்வும் கற்றுக்கொண்டார்கள். செவிவழிச் செய்தி இது.

## ஓதுவார் நெறிப்படுத்துதல்

சிவகுருநாத ஓதுவார், மதுரை மீனாட்சி சுந்தரர் கோயிலில் பரம்பரைத் தொழிலாகத் திருமுறைப்பணி செய்யும் மரபில் வந்தவர். அவர் பணிக்காக முன்னோர்க்குத் தானசாசனச் செப்புப் பட்டயம் கூறிய, ஓதுவார் செங்குளம் கிராம் நிலபுலன்களை மேற்பார்வையிட்டு நன்கு விளைச்சல் செய்து, தாம் மட்டும் கிராமத்தில் இருந்து பங்காளிகளைக் கொண்டு திருமுறைப் பணியைச் செய்து, மதுரைக்கு ஏழு வண்டிகளில் நெல் அனுப்புவது வழக்கம். நல்ல சிவஞானி.

## திருமுறை உணரல்

மொக்கப்பழனி சேர்வை, ஓதுவார் செங்குளம் கிராமத்தை இனாம்தார் வழிப்படி, உழுது பயிரிட்டு, உவந்து வாழும்போது தம் மக்கள் இருவரையும், சிவகுருநாத ஓதுவாரிடம் பணி செய்து தமிழ் கற்குமாறு பணித்திருந்தார். இயல்பாகவே உடல் வலிவும், நுண்ணறிவும் பெற்ற, மருது சகோதரர் இருவரும் ஓதுவார் பூஜைக்கு வேண்டிய, பூக்களைப் பறித்து வில்வம் முதலிய பத்திர இலைகள் நெடுந்தூரம் சென்று பறித்து வந்து கொடுத்து, ஆர்வத்துடன் அவர் பூசனைத் தரிசனத்தில் ஈடுபட்டு அவர் ஓதும் திருமுறைகளையும் கேட்டு மகிழ்ந்து, பக்தியும் சிரத்தையும் வளர்த்துக் கொண்டனர்.

## திருச்சுழியல் ஆடித்தவசு

பெரியவராகிய சிவகுருநாத ஓதுவார் மருது இருவருக்கும் நீதிநெறி விளக்கம், நாலடியார் நூல்கள் பாடம் சொல்வது வழக்கம். ஒரு நாள் ஆடித்தவசு பக்கத்து ஊர் திருச்சுழியலுக்கு ஓதுவார் சென்று தரிசித்து வந்தார். மருதிருவரும் திருச்சுழியலில் ஈடுபாடு வரும்படி, சுந்தரர் சேரமான் பெருமாள் மேற்படி தலத்துக்கு வந்தது. பதிகம் பாடியது, காளை வடிவத்தில் கனவில் தோன்றி இறைவன் காளையார் கோயிலுக்கு வரும்படி இருவரையும் பணித்தது முதலாகிய வரலாற்றை உணர்த்தினார். அதுகேட்ட சகோதரர் இருவரும் தவறாமல் த்வசுக்குச் சென்று வழிபட்டனர். அதுமட்டுமல்லாமல் கார்த்திகை, அமாவாசை, பௌர்ணமி நாட்களிலும் சென்று வழிபட்டு வரலாயினர். சுந்தரர் பாடிய தேவாரப்பாடலின் இத்தலத்து இருவரிகள் "பெரியமருது" உள்ளத்தில் நிழலாடியது.

அவ்வரிகள்

"திருச்சுழியல் தெய்வத்தினை வழிபாடு செய்து
எழுவார் அடி தொழுவார்
அவ்வத்திசைக்கு அரசாகி அவரால்
பிரியாளே"

என்பன. இது சுந்தரர் தமிழ்.

## சின்னமருது வினா

நுண்ணறிவும், தீரமும், வாய்ந்த சின்னமருது தன் தமிழாசானிடம் வணக்கம் செய்து, சுந்தரர் தேவாரப் பொருள், "கட்டாயம் 'பலிக்கும்' அல்லவா" - என்றார். ஆசிரியர், "ஆம்" என்று கூறியதோடன்றி, நீங்கள்

இருவரும் இப்பொழுதே சமஸ்தானம் சென்று படைவீரர் "ஆவீராக" என்றும் வாழ்த்துரைத்து, இருவரையும் அனுப்பி வைத்ததாக என் தந்தையார் கூறிய செய்திகள். அவர்கள் இராமநாதபுரம் சென்று, பின்பு புயவலி, பராக்கிரமத்தால் சிவகங்கை சென்று தளபதியாகி, சிவகங்கை அரசர் முத்துவடுகநாதர் மெச்ச, புகழ்பெற்ற வீரராயினர். வேலுநாச்சியார் விருப்பப்படி சமஸ்தானத்தின் ஆட்சிப்பொறுப்பை ஏற்று கி.பி. 1773 முதல் 1801 வரை குடிமக்கள் போற்றும் நல்லாட்சியை நிகழ்த்தினர். சிவகங்கைச் சீமையின் பொற்காலமும் அதுவே.

## ஓதுவார் சேவை

ஆட்சிப் பொறுப்பேற்ற இருவரையும் ஓதுவார் கண்டு மகிழ்ந்தார். அவர்க்குரிய ஓதுவார் செங்குளம் கிராமத்திற்கு நிலவரி நீக்கினார். புதிய இரண்டு கிராமங்கள், கல்குளம் - புதுக்குளம், திருநாகேசுவரமுடையார் கில்லுமடை கோயிலுக்கு வழங்கினார். இவையனைத்தும் மருதுபாண்டியர் செய்த ஆசிரியர் காணிக்கை. அதனைப் பெற்ற ஓதுவார் திருக்கானப்பேர் என்ற காளையார் கோயில் பாண்டி பதினான்கில் ஒன்று. இக்கோயிலின் தேவார வரி ஒன்றை அவர்களுக்கு நினைவூட்டினார். அதுவே காவல் கொண்டசாவாயிற்று.

"காவல் இறை" எனக்கு என்று
எய்துவது என்றுகொலோ?
கார் வயல் சூழ் கானப்பேருறை
காளையையே"

இது சுந்தரர் அருளியது.

## குருவைக் காட்டல்

திருச்சுழியல் தேவாரத்தால் அரசராகிய, நீங்கள் "காவல் இறைவனே" என்ற உணர்வைத்தரும் காளையார் கோயிலின், சிவப்பணியில் தொடர குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன குருமூர்த்திகளிடம் ஆசியும் உபதேசமும் பெறவேண்டும் என வழிப்படுத்த குருபிரான் சங்கரலிங்க முனிவரிடம், முறைப்படி பெரிய மருதுமட்டும் சிவபூசை பெற்றுக்கொள்ள, சின்னமருது சிவதருமங்களைக் குன்றக்குடியில் ஊருணியாகவும், திருப்பணியாகவும் நிகழ்த்தியவை முதலிய செய்திகள் பல வெளிவராதவை. காடன் செட்டியார், பெரிய சிவபூசகர் அவர் நேமம் கோயிலைச் சேர்ந்தவர். அவர்க்கும்

ஓதுவார்க்கும் மதுரையில் திருமுறைத் தொடர்பு மிகுதி. அவர் குன்றக்குடியில் சின்னமருதுக்கு உதவியாக சிவப்பணியில் நின்றதை "மயூரகிரிக் கோவை" பாடி மகிழும். தலைசிறந்த அடியவர் கூட்டுறவும் கிட்டியது.

## திருவண்ணாமலை ஆதீனத் தொடர்பின் உச்சம்

திருவண்ணாமலை ஆதீனக் குருமகான் குன்றக்குடியில் கொலுவீற்றிருக்கும் போது, - தருமையாதீனக் குருமணிகள் 12வது முத்துக்குமார தேசிகர் பாண்டித்தல யாத்திரையாக எழுந்தருளி இருவருமாக, காளையார் கோயில் தரிசனம் செய்துகொண்டு, மதுரைக்கு எழுந்தருளினர். சிவகங்கை மருது சகோதரர்களும் உடனாக வந்து மதுரை ஆதீனத்தில் அவர்களைத் தங்கச் செய்து, மறுநாள் மூன்று மகாசந்நிதானங்களும் சித்திரைத் திருவிழா திருக்கல்யாணத்துக்கு எழுந்தருளினர். அன்று வெள்ளிக்கிழமை கோடை மழை கொட்டித் தீர்த்தது. சின்னமருது முன்செல்ல பெரியமருதும் மூன்று சந்நிதானங்களும் கோயில்வாசலில் வரவேற்பைப் பெற்றுக்கொண்டு, ஆடிவீதிவழியாக வலமாக வந்தனர். ஆடிவீதி தென்கீழ் மூலையில் பச்சைக் கொடி கட்டி, இஸ்லாமியப் பெருமக்கள் தொழுகை நடத்திக் கொண்டிருந்தனர். "இது சரியன்று" என்று குருமணிகள் குறிப்பு அருளியதும் - "மூவரும் அரசரும், ஆடி வீதி வலம் நிறைவாவதற்குள், இடத்தைக் காலிசெய்துவிட வேண்டும்" என்றும், "பிரதியாக தெற்குவாசல் சின்னக்கடையில் பள்ளிவாசல் உடனமைக்கப்படும்" - என்றும் சின்னமருது மொழிந்து செயல்படுத்திய திறம், இன்றும் மதுரை முதியவர்களின் உள்ளத்தில் தெரியவரும். சின்னக்கடை, தெற்குவாசல் பள்ளிவாசல் சின்னமருதுகட்டிக் கொடுத்தது என்பதும், அறியத்தக்கது. இதனால் கோயிலின் தனித்தன்மையையும், மரபையும் பேணிக் காத்த திறம், திருமுறைத் தமிழ் கொடுத்த ஊற்றம் என்பதை விண்ணப்பித்துக் கொள்வேன்.

## நிறைவுரை

திருவாலவாய்ச் சொக்கர் சந்நிதியிலும், மீனாட்சி சந்நிதியிலும் திருவாச்சி பெரிதாகச் செய்யச் செய்து 1008 விளக்குகள் தினமும் ஏற்றச் செய்து மருது சகோதரர்கள் அதற்காகப் பிரமனூர் கிராமத்தைத் தானம் செய்துள்ளனர். இது "விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்" என்ற தேவாரத் தமிழ் வெளிப்பாடாம். குன்றக்குடி

மகாசந்நிதானம் ஆணைப்படி மதுரையில் கல்யாண மண்டபத்துக்கு முன், ஒரு மண்டபங்கட்டச் செய்து, சுவாமி ஆறாந்திருநாள் எழச்செய்து, சமயஸ்தாபனலீலை நிகழ்த்தவும் ஏற்பாடு செய்தபடி, சேர்வைகாரர் மண்டபம் கட்டப்பட்டு, இன்றும் அங்கு ஆறாம்நாள் விழா நிகழ்கிறது. வெள்ளிகோரதமும் அவர்கள் வழங்கி பக்தியில் தலை நின்றனர். இவர்களின் சுதந்தர உணர்வு கி.பி. 1801-ஆம் ஆண்டு தூக்கினை வழங்கியது. காளையார்கோயில் காளேசன் சன்னிதியில் அவரது உடல்கள் சமாதி வைக்கப்பட்டது. அவர்களது வேண்டுகோட்படி அவர்கள் மறைந்ததும் சிவதருமங்கள் நிகழ்கின்றன. இதற்கெல்லாம் மூலமாக விளங்கியது "திருமுறைத்தமிழ்" அத்தமிழில் உளம்பற்றிய அவர்கள் "காவல் இறைவன்" என்ற உணர்வைப் பெற்றதால்தான், "கோபுரம் இடிபடக் கூடாது" எனச் சரணடைந்து இன்று நம்மால் வணங்கும் கடவுளாயினர்.

வாழ்க திருமுறைத்தமிழ்! வாழ்க மருதுபாண்டியர்!.

*"கம்பன் என்றொரு மானிடன்" கட்டுரை தொடர் அடுத்த இதழில் தொடரும்.*

## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

**- ஆசிரியர்**

# அருளாலயப் பிரதோசம்

(தமிழாகரர். **தெ. முருகசாமி,** புதுச்சேரி -9)

அந்தநாள் ஆல யத்துள்
    அரிதாகக் காணப் பட்ட
வந்தனை வழிபா டான
    வளர்புகழ் பிரதோ சத்தை
இந்தநாள் மக்கள் கூட்டம்
    இருமுறை மாதத் திற்காய்,
சிந்தையுடன் கும்பி டற்குச்
    சிவாலயம் செல்வ தேனோ?

பத்திதான் முத்திப் போச்சோ?
    பலருக்கும் எளிமை யாக
முத்தியை ஆல யத்துள்
    முறையாகத் தருகின் றாரோ?
எத்திசைச் சிவால யத்தும்
    இதுவரை இதுபோ லின்றி
மொய்த்திடும் கூட்டந் தன்னை
    மொத்தமாய்ப் பார்த்த தில்லை!

குறிப்பிட்ட மாலை வேளை
    குறிப்பாக நால ரைக்கு
நெறிப்பட்ட நேரத் தின்மேல்
    நெடியமணி ஆறுக் குள்ளே
தறிப்பட்ட நாடாப் போலத்
    தம்பக்கம் நில்லா நெஞ்சம்
உறிப்பிட்ட நெய்யைப் போல
    உருகியங்கே ஓடுவ தேனோ?

கூடிடும் கூட்டம் பற்றிக்
    குறிப்பிட வேண்டும்! அங்கு
நாடியே நடந்து வந்தோர்!
    நலிந்திட்ட தேகந் தன்னால்
வாடிய வயோதி கத்தால்
    வதிந்திடும் முதியோர்! மற்றும்
நீடிய வாக னத்தார்!
    நிரல்பட வருவார் தாமே!

அதிலுமே சனியென் றிட்டால்
அலைமோதும் கூட்டம்! வீட்டில்
எதிலுமே துணையைத் தேடும்
எலும்புதோல் மனிதர் கூட
அதிகமாய் ஆசைப் பட்டே
அரன்கோயில் முந்திச் சென்று
கதிபெற வேண்டி அந்தக்
கணநாதர் நந்திப் பக்கம்

குந்தியே இடம்பி டித்துக்
குறைவற நடக்கும் அந்தச்
சந்நிதி முன்னே உள்ள
சதுர்நந்தி வழிபாட் டோடு
சந்நிதி யான லிங்கச்
சடாமுடி ஈச னுக்கும்
அந்தியில் நடப்ப தான
அனைத்தையும் களித்துக் காண்பார்!

கூடிய கூட்டந் தானும்
குறிப்பிட்ட பிரதோ சத்தை
நாடியே களித்த பின்னர்
நலமாகக் கோயில் தன்னைப்
பாடியே வலம்வா ராமல்
பழக்கத்தின் மாறாய் அங்கே
நீடிய இடமாய்த் தானும்
நெடுங்கோயில் சுற்றும் போது;

பிரகாரம் தன்னில் யாரும்
பிரதோச மகிமை பற்றிச்
சரமாகப் பேசி னாலோ
சற்றுமதைக் கேளா ராகி
வரம்பெற வந்த கூட்டம்
வகையாக விழுந்த கல்லால்
உரமாகக் கத்தி யோடும்
உறுகாக்கைப் போலா வாரே!

சுண்டலொடு பொங்கல் என்ற
சுகமான விநியோ கத்தை
அண்டியங்கே வாங்கு தற்கு,
அலைபாய்ந்து முட்டி மோதி
கொண்டிட்ட பிரசாதத்தைக்
கொடுத்திடும்வி பூதி மேலாய்
மண்டிடும் விருப்பத் தாலே
மகேசனையும் மறப்பா ரந்தோ!

சுண்டல்பெறும் சுகத்திற் காகச்
சுற்றுதோ கூட்டம்? அன்றி
அண்டர்நா யகரை வேண்டி
அருள்பெறக் கூடிற் றோதான்?
பண்டிதுபோல் இலையே? இந்தப்
பழக்கத்தின் கார ணத்தைக்
கண்டிடவே நினைத்த போது
கடவுளென ஒருவர் வந்தார்!

யார்தாம்நீர்! என்றேன், அன்னார்
யாரானால் என்ன? உள்ளப்
பாரத்தின் சுமையைச் சொன்னால்
பாங்காகக் களைவேன் என்றார்!
சீராக மேலே சொன்ன
சிந்தையுறும் பிரதோ சத்தின்
வேரான விளக்கந் தன்னை
[1] வெள்ளெனவே உரைப்பீ ரென்றேன்!

பாற்கடலைக் கடைந்தோர் அங்கே
பரவிய நஞ்சைக் கண்டு
நாற்றிசையும் ஓட அந்த
நஞ்சினைச் சிவனும் உண்டே
ஏற்றிட்ட தலைமைக் காக
எத்தோசம் வந்திட் டாலும்
[2] தோற்பின்றித் துணிந்து, ஏற்கும்
தொண்டுதான் தலைமை என்று;

காட்டிட்ட சிவத்தின் உண்மை
கருத்தினில் கொண்டால் நம்மின்
வீட்டிலும் நாட்டில் தானும்
வினைசெயும் இடத்தில் எல்லாம்
வாட்டமது வந்திட் டாலும்
வலிமையாய் எதிர்கொள் கின்ற
நாட்டமது கொள்ளல் தானே
நற்றலைமைப் பண்பென் றார்ரே!

இதுபோல எதிலும் யாரும்
இன்பதுன்பை இணையாய்க் கொண்டு
புதுமைசெய் முன்னேற் றத்தில்
[3] புரையோராய் வாழ்தல் என்னும்
அதுவேதான் பிரதோ சத்தின்
அருமையுறும் விளக்க மின்றி
எதுசொன்ன போதும் ஏலா,
என்பதுவே உண்மை என்றார்!

சடங்கினை நம்பும் கூட்டம்
சத்தியம் மிக்க அந்த
உடம்படு உயர்மா னுடத்தின்
உன்னதம் உணரா திங்கே
முடம்படும் வாழ்க்கை வாழ்ந்தால்
முழுஉண்மை யான அந்த
விடமுண்ட கடவுள் கொள்கை
வியாபாரம் ஆகுந் தானே!

என்றவர் சொன்ன போது
"இதயத்தை" [4] உசுப்பி விட்டீர்!
நன்றியென வாய்தி றந்து
நந்திசிலை யில்லாப் பக்கம்
நின்றுநான் கூறுவ தாக
நின்றதமிழ்க் குன்றக் குடியில்
[5] அன்றிலென ஒன்றிப் போனேன்!
அருளாலயப் பிரதோ சத்தே!

1. தெளிவாக 2. தோல்வியின்றி 3. உயர்ச்சியுடையோராய் 4. எழுப்பி
5. ஈருடல் இணைந்த ஒரு பறவை.

# என்றும் வாழ்வார்!

## (மு. பழனி இராகுலதாசன்)



(4.12.06-ஆம் நாள் 90ஆம் வயதில் காலமான விடுதலைப் போராட்ட வீரர் தோழர் கே.எம்.சுப்பையா (கே.எம்.எஸ்) அவர்களுக்கு அஞ்சலிக் கவிதை)

விடுதலையாம் வேள்வியிலே காந்தி என்றும்
விரிவான மார்க்சியத்தில் ஜீவா என்றும்
நெடுநோக்குக் கவிதைக்குப் பாரதி என்றும்
நெஞ்சார்ந்த மதத்துக்கு அடிகள் என்றும்
நடுநோக்கில் சான்றோரைத் தேர்ந்து கொண்டு
நாளெல்லாம் அவர்வழியில் சேவை செய்தார்;
கடுநோக்கம் சுடுவார்த்தை ஏதும் இல்லாக்
கண்ணியவான் "கே.எம்.எஸ்" மறைந்து விட்டார்

பாரதிக்கு நகரினிலே சங்கம் கண்டார்;
பாட்டாளித் தோழருக்கும் அமைப்பு வைத்தார்;
பாரெல்லாம் படிக்கட்டும் என்றே எண்ணிப்
படிப்பகமும் நூலகமும் அமைத்து வைத்தார்;
போரில்லாப் புதுஉலகம் காண எண்ணிப்
பொதுவுடைமைத் தத்துவத்தைப் பரப்பி வந்தார்;
ஊரெல்லாம் இவர் படைப்பு வாழும்போது
உற்றிடுமோ ஓர்மரணம்! என்றும் வாழ்வார்!

# குன்றக்குடிக் குடைவரைகளும் கல்வெட்டுகளும்

(டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன்)

சிவகங்கை மாவட்டத்தில் திருப்புத்தூருக்கும் காரைக்குடிக்கும் இடையில் அமைந்துள்ள குன்றக்குடி, வணக்கத்திற்குரிய அடிகளார் பெருமானால் உலகப் பார்வையைப் பெற்றுவிட்ட சீரான சிற்றூர். இங்குள்ள குன்றின் மேல், குமரனுக்கான கற்றளியொன்று அமைந்துள்ளது. இதே குன்றின் தென்சரிவில் மூன்று குடைவரைகள் அடுத்தடுத்துக் குடையப்பட்டுள்ளன. தமிழகத்தில் இந்த அமைப்பு முறையைக் குன்றக்குடியில் மட்டுமே பார்க்கமுடிகிறது.

இக்குடைவரைகளின் முன்னே, இவற்றை முழுவதுமாய்ப் பார்வையிலிருந்து மறைத்துப் பெருமண்டபமொன்று பிற்காலத்தில் எடுக்கப்பட்டுள்ளது. இம்மண்டபத்தை எடுப்பித்த பெருமக்கள் இங்குள்ள தூண்களில் நின்றபடி கைகுவித்து வரவேற்கின்றனர். இவர்களின் பெயர்களைத் தெரிந்துகொள்ள இங்குள்ள கல்வெட்டுகள் ஒத்துழைக்காதபோதும், இவர்தம் தோற்றம் இம்மண்டபத்தின் காலத்தைப் பதினெட்டாம் நூற்றாண்டாகக் கருதவைக்கிறது.

இந்த வெளிப் பெருமண்டபத்தின் முகப்பு, வாயில்களின்றி முற்றிலும் திறப்பாக அமைந்துள்ளது. மண்டபத்தின் மேற்கில் வரிசையாக மூன்று திருமுன்கள் கிழக்கு நோக்கி அமைந்துள்ளன. இவற்றின் வாயில்கள் மேல் யானைத்திருமகள் சிற்பங்கள் முதல் திருமுன்னில் அழகுடைநாயகி ஆட்சி செய்கிறார். இரண்டாம் திருமுன், இறைவடிவம் இல்லாமையால் இந்தியத் தொல்லியல் துறையின் காப்பறையாகியுள்ளது. மூன்றாம் திருமுன், தேனாற்றுநாதர் என்ற பெயரிலமைந்த இலிங்கத் திருமேனியைக் கொண்டுள்ளது. காப்பறையின் முகப்புச் சுவரில் இறைவனும் இறைவியும் காளைமீது வீற்றிருக்க, இருபுறமும் போற்றும் ஆடவர்களும் கவரிப் பெண்களும் காட்டப்பட்டுள்ளனர்.

இறைவன், இறைவித் திருமுன்கள் இரண்டும் உள்மண்டபம், கருவறை கொண்ட ஒருதளத் திராவிட விமானங்களாகப் பிற்பாண்டியர் காலத்தில் எழுப்பப்பட்டவை. வெளிப் பெருமண்டபம் கட்டிய காலத்தில், இவை ஒவ்வொன்றின் முன்னாலும் முகமண்டபமொன்று இணைக்கப்பட்டு, வாயில்கள் பெருமண்டபத்தில் இருக்குமாறு அமைக்கப்பட்டன. இம்முகமண்டபங்கள் இன்று ஒழுங்கின்றி

அமைந்துள்ளன. தேனாற்றுநாதர் திருமுன் சுவர்களில் ஐந்து கல்வெட்டுகள் காணப்படுகின்றன. அழகுடைநாயகி திருமுன் வாயிலில் வராகி, இந்திராணி தவிர்த்த பிற அன்னையர், வீரபத்திரர், பிள்ளையார், சேட்டை இவர்தம் சிற்பங்கள் காணப்படுகின்றன. இவற்றுள் பல பொரிந்துள்ளன. உத்குடியாசனத்தில், தளர்ந்த மார்பகங்களும் வலக்கையில் ஓங்கிய கத்தியுமாய்க் காட்சிதரும் சாமுண்டியின் தோற்றம் குன்னத்தூர், கோகர்ணம் சாமுண்டிச் சிற்பங்களை ஒத்துள்ளமை இங்குக் குறிப்பிடத்தக்கது. – 2.

தேனாற்றுநாதர் திருமுன்னுக்கு முன்னால் வெளிப் பெருமண்டபத்தில் நந்தியும் காப்பறைக்கும் இறைவன் திருமுன் வாயிலுக்கும் இடையிலுள்ள மேடையொன்றில் பிள்ளையார் திருமேனியும் இலிங்கமும் இருத்தப்பட்டுள்ளன. பெருமண்டபத்தின் பின்சுவர் தேனாற்றுநாதர் திருமுன்னுக்குச் சற்று முன்வரை வந்து நின்றுவிடுகிறது. இரண்டு வாயில்களையும் மூன்று சாளரங்களையும் கொண்டுள்ள இப்பின்சுவர், மலைக்கொழுந்துநாதர் திருமுன்னாகப் பெயரிடப்பட்டுள்ள மூன்றாம் குடைவரையின் முன்னால் உருவாக்கப்பட்டுள்ள அதன் பெருமண்டப மேற்குச் சுவருடன் இணைகிறது.

பின்சுவரிலுள்ள வாயில்கள் இரண்டுமே நடுக்குடைவரையை அடைவதற்காக அமைக்கப்பட்டுள்ளன. இவற்றுள் பெரியது ஏறத்தாழக் கருவறைக்கு நேராக எடுக்கப்பட்டுள்ளது. சிறிய வாயில் அக்குடைவரையில் நிறுவப்பட்டிருக்கும் சேத்ரபாலர் திருமேனி இருக்கும் இடத்தைத் தனித் திருமுன் போல் காட்டுவதற்காக அமைக்கப்பட்டுள்ளது. இவ்வாயில்களின் மேலும் யானைத்திருமகள் சிற்பம் காணப்படுகிறது.

இவ்வாயில்கள் அமைந்துள்ள சுவரின் மேற்பரப்பில் கிடந்த கோலத்தில் பெருமாள், வாயில்களின் இடப்புறம் மிகச் சிறிய சாளரமொன்றும் வலப்புறம் இரண்டு சாளரங்களும் உள்ளன. இடச்சாளரம் நடுக்குடைவரைக்கும் மூன்றாம் குடைவரைக்கும் இடையிலுள்ள மலைப்பாறையில் செதுக்கப்பட்டிருக்கும் பிள்ளையார் வடிவத்தைக் காண்பதற்காக அமைக்கப்பட்டுள்ளது. வலச்சாளரங்கள் இரண்டனுள் பெரியது நடுக்குடைவரையின் மேற்குப்புற வாயிற்காவலரைப் பார்க்க உதவுகிறது. சிறிய சாளரம் முதற்குடைவரைக்கும் நடுக்குடைவரைக்கும் இடையிலுள்ள கோட்ட இலிங்கத்தை மட்டும் பார்க்கும் நிலையில் அமைக்கப்பட்டுள்ளது.

வெளிப் பெருமண்டபத்தின் கிழக்கில் மண்டபத்திற்குள்

பிதுக்கமாய் அமைந்திருக்கும் மூன்றாம் குடைவரையின் பெருமண்டபச் சுவர்களில் கல்வெட்டுகள் உள்ளன.3. அவற்றுள் ஒன்று அப்பெருமண்டபத் திருப்பணி கி.பி. 1559-ல் நடைபெற்றதாகக் கூறுகிறது. இக்கல்வெட்டின் தொடர்பற்ற நிலையே பிற்காலத்தில் மீண்டுமொரு திருப்பணிக்கு இம்மண்டபம் ஆளானதைத் தெளிவாக்குகிறது.

வெளிப் பெருமண்டபப் பின்சுவர் வாயில்களின் வழியாகவோ, அல்லது மேற்கே இச்சுவர் நின்றுவிடுவதால் உண்டாகியிருக்கும் வழியாகவோ உள் நுழைந்தால் முதலிரண்டு குடைவரைகளுக்கு முன்னால் எடுக்கப்பட்டிருக்கும் நீளமான, அகலம் குறுகிய பிற்காலத் திருப்பணியான திருநடைமாளிகையை அடையலாம்.

இந்நடைமாளிகையின் கிழக்கில் மூன்றாம் குடைவரையின் பெருமண்டபச் சுவர் தடுப்பாக அமைய, மேற்கில் வாயிலில்லா வழி, காற்றும் ஓரளவு வெளிச்சமும் உள்வர அனுமதிக்கிறது. தேனாற்று நாதர், அழகுடைநாயகி விமானங்களைக் காணவும் குன்றின் சரிவைப் பார்வையிடவும் இவ்வழி உதவுகிறது.

இருவரிசைத் தூண்களோடு நீளும் திருநடைமாளிகையின் தூண்களுள் பல சரியாகப் பொளியப்படாமல் உள்ளன. இவற்றின் வெட்டுப் போதிகைகள் பிற்காலத் தழுவலாகும். சில தூண்கள் சிற்பங்களோடு உள்ளன. முன் வரிசைத் தூண்களில் ஐந்து தவிர, பிற தூண்கள் வெளிப்பெருமண்டபப் பின்சுவருடன் ஐக்கியமாகி உள்ளன.

பின்வரிசையின் முதல் தூண், முதற் குடைவரையின் தொடக்கப் பகுதியுடன் இணைக்கப்பட்டுள்ளது. இரண்டாம் மூன்றாம் தூண்கள் முதற் குடைவரையின் முன் உள்ளன. நான்காம், ஐந்தாம் தூண்கள் கோட்ட இலிங்கமுள்ள பாறையின் இருமுனைகளிலும் இணைக்கப்பட்டுள்ளன. ஆறாம் தூண் நடுக் குடைவரையின் முன் நிற்கிறது. ஏழாம் தூண் சேத்ரபாலரைத் தனித்துக் காட்டக் கட்டப்பட்டுள்ள பிற்காலச் சுவரமைப்பில் மறைந்துள்ளது.

இச்சுவர், நடுக் குடைவரையின் கிழக்கு முகப்புத் தூணில் தொடங்கித் திருநடைமாளிகைத் தூண்வரை ஏறத்தாழ 1,89 மீ. தெற்காக நீண்டு, பின் கிழக்கில் திரும்பிப் பிள்ளையார் கோட்டப் பாறைவரை தொடர்கிறது. இத்தொடரின் இடையில், வெளிப்பெருமண்டபச் சிறுவாயிலுக்கு நேராக, 83 செ.மீ. அகலத்தில் ஒரு வாயில் உள்ளது. இதில் நுழைந்தால், நடுக் குடைவரையின் கிழக்குப்பகுதியை அடையலாம். குடைவரை முகமண்டபத்தில் நிறுவப்பட்டுள்ள சேத்ரபாலர் 4 திருமேனியைப் பார்க்கவும் அத்திருமேனி தனித்

திருமுன்னில் இருப்பது போன்ற தோற்றத்தை உண்டாக்கவும் இச்சுவரமைப்பு எடுக்கப்பட்டுள்ளது.

குடைவரைகள்

குன்றின் தென்சரிவில் மூன்று குடைவரைகள் அடுத்தடுத்துக் குடையப்பட்டுள்ளன. ஒவ்வொன்றின் இடையிலும் ஏறத்தாழ 1.50 மீ. அளவிலான பாறை விடப்பட்டுள்ளது. இப்பாறைப்பகுதிகளின் குடைவரைப் பக்கங்கள் சுவர்களாகப் பொளியப்பட்டுள்ளன. குடைவரைகளுக்கு இடையிலான பாறைப்பகுதிக்ளில் சிற்பங்கள் செதுக்கப்பட்டுள்ளன.

முதற் குடைவரைக்கும் இரண்டாம் குடைவரைக்கும் இடையிலுள்ள பாறைப்பகுதியில் ஒரு மீட்டர் உயரம், 82 செ.மீ. அகலத்திற்குக் கோட்டமொன்றை அகழ்ந்து, அதில் ஆவுடையாருடன், இலிங்க பாணத்தை உருவாக்கியிருக்கிறார்கள்.5.

இரண்டாம் குடைவரைக்கும் மூன்றாம் குடைவரைக்கும் இடையிலுள்ள பாறையில், 1,10 மீ உயரத்தில் 1.05 மீ. அகலத்தில் கோட்டம் அகழ்ந்து பிள்ளையாரைச் செதுக்கியுள்ளனர். அர்த்த பத்மாசனத்தில் 6 இடமுன்கையால் உதரபந்தத்தைத் தொட்டபடி, வலமுன்கையிலும் வலமாய்ச் சுற்றிய துளைக்கையிலும் மோதகங்களை ஏந்திக் காட்சியளிக்கும் இவர் வலப்பின்கையில் அடர்ந்த தோகையுடன் கரும்பு உள்ளது.7. இடப்பின்கையிலுள்ள பொருள் மலர் மொட்டாகலாம். கைகளின் மேற்பகுதியில் கங்கணங்களும் மணிக்கட்டுகளில் பட்டை வளைகளும் கொண்டு மகுடமற்ற தலையராய் 8 அமர்ந்திருக்கும் இவரின் இரண்டு தந்தங்களும் உடைந்துள்ளன. முப்புரிநூல் நிவீதமாக உள்ளது. கழுத்தில் ருத்திராக்கமாலை, அரைக்கச்சின் முடிச்சுத்தொங்கல்கள் கால்களின் மீது படர்ந்துள்ளன.

முதற் குடைவரை

கருவறை, முகமண்டபம், முகப்பு என்றமைந்துள்ள இக்குடைவரையின் மேற்குச் சுவரையொட்டி மலைப்பாறையிலிருந்து திருநடைமாளிகையின் மேற்குப்பகுதியில் தெற்காகச் சிறு தடுப்புச் சுவரொன்று பிற்காலத்தே எடுக்கப்பட்டுள்ளது. இது மலைவெளிக்குச் செல்லும் பாதையிலிருந்து குடைவரையைப் பிரிக்கிறது. திருநடைமாளிகையின் தரையமைப்பிலிருந்து குடைவரையின் முகப்புக்கு முன்னுள்ள தரை 33 செ.மீ. உயரத்தில் அமைந்துள்ளது. இத்தரையின் முகப்பு கருவறைக்கு எதிரில் மட்டும் சற்று மழுங்கலாக

மடிந்தும் அதன் இருபுறங்களிலும் பட்டையாக மடிந்தும் கீழிறங்குமாறு அமைக்கப்பட்டுள்ளது. இத்தரைப்பகுதியிலும் மடிப்புகளிலும் சிதைந்த கல்வெட்டொன்று காணப்படுகிறது.

ஏறத்தாழ 76 செ.மீ. அகலமும் 5.88 மீ. நீளமும் உள்ள இத்தரையின் வடபுறத்தே சதுரமாகச் செதுக்கி நடுவில் குழியொன்று அகழப்பட்டுள்ளது. பார்ப்பதற்கு ஆட்டுக்கல்லின் மேலமைப்புப் போலத் தோற்றமளிக்கும் இதனருகே குழவியொன்றும் கிடத்தப்பட்டுள்ளது. மிகப் பிற்பட்ட காலத்துச் செதுக்கலான இவ்வமைப்பு இன்றும் பயன்பாட்டில் உள்ளது.

இத்தரையிலிருந்து 5 செ.மீ. உயரத்தில் உள்ள 5.39 மீ. நீளம் 60 செ.மீ. அகல முகப்புத் தளத்தின்மீது நான்கு தூண்கள் எழுகின்றன. இத்தூண்கள் தளத்தின் விளிம்பிலிருந்து ஏறத்தாழ ஐந்திலிருந்து ஏழு சென்டிமீட்டர் அளவிற்கு உள்தள்ளி எழுகின்றன. இத்தள அமைப்பு முகமண்டபத் தரையோடு சரிந்து இணைந்தாலும் இரண்டிற்கும் இடையே வேறுபாடு தெளிவாகக் காட்டப்பட்டுள்ளது. இத்தளமும் தூண்களுமே முகமண்டபத்தையும் முன்னுள்ள தரையையும் பிரிக்கின்றன.

முகப்புத் தூண்களுள் இடைத்தூண்கள் இரண்டும் முழுத் தூண்களாக அமையப் பக்கத்தூண்கள் அரைத்தூண்களாக உள்ளன. இடைத்தூண்கள் சதுரம், கட்டு, சதுரம் என அமையப் பக்கத் தூண்கள் நான்முகத் தூண்களாய் விடப்பட்டுள்ளன.9 நான்கு தூண்களிலுமே கல்வெட்டுகள் உள்ளன. இத்தூண்களின் போதிகைகள் அளவிலும் கனத்திலும் சிறியனவாய் உள்ளன. விரிகோணத்தில் திரும்பும் இவற்றின் மேற்கைகளைவிடக் கீழ்க்கைகள் சிறியனவாக உள்ளன. மேற்கைகள் உத்திரத்தை அடையும் இடத்தில் சிறுமடிப்புக் காட்டப்பட்டுள்ளது. இவ்வமைப்பு இங்குள்ள மூன்று குடைவரைகளிலுமே காணப்படுகிறது.

போதிகைகளின் கீழ்க்கைகளைவிட கனம் குறைந்ததாய், அளவில் சிறுத்துக் காணப்படும் உத்திரத்தின் மேல் பிதுக்கமாய் வாஜனம், வாஜனத்தை ஒட்டிய பாறைச்சரிவு 96 செ.மீ. அளவுக்கு நீண்டு முகப்புக்கு முன்னுள்ள தரையமைப்புவரையில் கூரையென அமைந்துள்ளது. குடைவரையின் முன்னாலுள்ள திருநடைமாளிகையின் கூரை இப்பாறைச் சரிவுடன் பொருந்த இணைக்கப்பட்டுள்ளது.

முகப்புத் தூண்களுக்குப் பின்னால் 6.30 மீ நீளம் 1.43 மீ. அகலம் கொண்டமைந்துள்ள முகமண்டபத்தின் பின்சுவரிலோ பக்கச் சுவர் களிலோ சிற்பங்கள் ஏதுமில்லை. மாறாகக் கல்வெட்டுகள் காணப்

படுகின்றன. முகமண்டபத்தின் கூரையும் வெறுமையாக உள்ளது. இம்முக மண்டபத்தின் மேற்குச் சுவர் அருகே முருகன் வள்ளி தெய்வானை யுடன் எழுந்தருளியுள்ளார். இத்திருமேனிகளை மாறவர்மர் சுந்தர பாண்டியரின் மூன்றாம் ஆட்சியாண்டில் புவன கங்கன் என்பார் எழுந்தருளுவித்ததாகத் தேனாற்றுநாதர் திருமுன் கல்வெட்டுக் கூறுகிறது. 10

முகமண்டபப் பின்சுவரின் நடுப்பகுதியில் 2.14. மீ உயரமும் 98 செ.மீ. அகலமும் உடைய வாயிலுடன் கருவறை குடையப்பட்டுள்ளது. வாயிலின் இருபுறமும் முகமண்டபத் தரையில் நாகர் வடிவங்கள் சில இருத்தப்பட்டுள்ளன. கருவறைக்கு முன்னுள்ள மூன்று படிகளுள், கீழ்ப்படி அரைநிலா வடிவத்தில் அமைந்துள்ளது.

இறுதிப் படியைவிட 6.5 செ.மீ உயரமான தரையமைப்புப் பெற்றுள்ள கருவறையின் உயரம் 2.30. மீ இதன் அகலம் தென் வடலாக 3.13 மீ. நீளம், கிழக்குமேற்காக 3.55. மீ. சுவர்களும் கூரையும் வெறுமையாக உள்ள இக்கருவறையின் நடுப்பகுதியில் தாய்ப்பாறையில் 1.36 மீ. பக்கமுடைய சதுர ஆவுடையாரும் 76 செ.மீ. உயரமும் 1.60. மீ சுற்றளவுமுள்ள பாணமும் உருவாக்கப்பட்டுள்ளன.

ஜகதி, எண்பட்டைக் குமுதம், கம்புகளின் தழுவலோடு பாதங்கள் பெற்ற பெரிய அளவிலான கண்டம், பட்டிகை, மேற்கம்பு என ஆவுடையாரின் வெளிப்பகுதி அழகுபடுத்தப்பட்டுள்ளது. ஆவுடையாரின் வலப்புறம் பட்டிகைப்பகுதியில் மேற்குப் பார்வையில் சிறியதாய்க் காணப்படும் மேற்கு நோக்கிய கோமுகத்தைப் பூதமொன்று தலையில் தாங்குகின்றது. இப்பூதம் தன் கைகளை முழங்கால்களில் அழுத்திக் கொண்டு நன்றாகக் குனிந்து முட்டுக்கொடுப்பது போல் கோமுகத்தைத் தாங்கும் அழகு சிறப்பாகக் காட்டப்பட்டுள்ளது. இதன் பாதங்கள் கண்டத்தின் கீழ்க் கம்பில் இருக்கத் தலை, கோமுகத்தைத் தாங்கக் கண்டப்பகுதியில் பொருந்தியுள்ளது.

முகமண்டபப் பின்சுவரில் கருவறை வாயிலையொட்டி அதன் இருபுறமும் 2 மீ. உயரத்திற்கு வலப்புறம் 75 செ.மீ. அகலத்திற்கும் இடப்புறம் 65 செ.மீ. அகலத்திற்கும் குடைவரையின் சுவர்ப்பகுதி அகற்றப்பட்டு, அவ்விடங்களில் அதே அளவிலான பாறைப் பாளங்கள் வைத்துப் பூசப்பட்டுள்ளன. தமிழகத்திலுள்ள வேறெந்தக் குடைவரையிலும் காணப்பெறா அதிசயம் இது. இவற்றுள் வலப்புறப் பாளத்தின்மீது சடையவர்மர் ஸ்ரீ வல்லபரின் நான்காம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக் காணப்படுகிறது. இந்த அகற்றலும் பொருத்தலும் ஏன் நிகழ்ந்தன என்பது புதிராகவே உள்ளது.

(தொடரும்)

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம்

## ஆதிகுரு முதல்வர்
## அருளாளர் தெய்வசிகாமணி பரமாசாரிய சுவாமிகள்

# போற்றித் திருவேண்டல் பதிகம்

("நவரசக் கவிமணி" ஏ.டி.எம். பன்னீர்ச்செல்வம்)

அண்ணா மலையின் மைந்தா போற்றி!
ஆதீனம் கண்டாய் அரசே போற்றி!
உண்ணா முலைமடி உவந்தாய் போற்றி!
உலகம் வணங்கிட உயர்ந்தாய் போற்றி!
மண்ணாள் மன்னரும் மலைத்தார் போற்றி!
மன்பதை உன்பதம் இழுத்தாய் போற்றி!
தண்ணார் தமிழே தலைவா போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

காளத்தி நாதனைக் கண்டாய் போற்றி!
காலமும் அதைத்தொழ நின்றாய் போற்றி!
ஞாலத்துள் சிவவொளி நயந்தாய் போற்றி!
நாளுமே அதன்வெளித் திரிந்தாய் போற்றி!
வேலொற்றி மயூரகிரி வாழ்வோய் போற்றி!
மேலதாம் தமிழ்மொழி வளர்ப்போய் போற்றி!
தாளொற்றி நடக்கத் தயவுசெய் போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

அருணையின் மாப்புகழ் அணிகல போற்றி!
ஆணவக் கழிமலம் அழிப்பாய் போற்றி!
கருணையின் சோதியில் கலந்தாய் போற்றி!
கலியிதன் கொடுமைகள் களைவாய் போற்றி!

பொருணையின் குளிர்ச்சியில் பொதிந்தாய் போற்றி!
பொக்கிஷம் நீஅதைப் பணிந்தனம் போற்றி!
தருணமிது அளித்தவென் தயாள போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

சிவஞானப் போதத் தொடரே போற்றி!
சத்சித் ஆனந்த தயாபர போற்றி!
உவமானம் உபமேய மில்லாய் போற்றி!
உத்தமத் தத்துவ உள்ளொளி போற்றி!
நவமாய்க் கலிகண்டு நகைப்பவ போற்றி!
நமச்சி வாயத்துள் நிலைத்தாய் போற்றி!
தவஞானச் சுடரே தணலே போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

மண்பதைப் பணிகளில் மருந்தே போற்றி!
மானுடம் தேடிடும் மகத்துவா போற்றி!
அன்பதை விதைத்த ஆனந்த போற்றி!
அருளே போற்றி! அறிவே போற்றி!
பண்பதை ஊட்டிடும் பரவொளி போற்றி!
பாப நாசனே பதமலர் போற்றி!
நின்பதம் தொழுதோம் நித்திய போற்றி!
தெய்வ சிகாமணித் தேவே போற்றி!

(தொடரும்)

தேவகோட்டை விடுதலைப் போராட்ட வீரர்

## கே.எம். சுப்பையா மறைவு

அருள்நெறித்தந்தையின் முதல்நிலை அன்பர்களில் ஒருவரும் விடுதலைப் போராட்ட வீரருமாகிய தேவகோட்டை திரு. கே.எம்.சுப்பையா அவர்கள் 14.12.2006இல் காலமானார். அவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் அவர்தம் குடும்பத்தினருக்கும் நண்பர்களுக்கும் "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்திக்கொள்கிறது. அப்பெருமகனாரை நினைந்து அஞ்சலி செய்கிறது.

– (ஆசிரியர்)

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# அறிவியல் உறவும் - ஆன்மீக உறவும்

(டாக்டர். கே. பாலகிருஷ்ணன்)

பாகம் - 7

பல அறிவியல் ஆய்வுக் கூடங்களோடு அடிகளார் அவர்கள் இணைந்து செயல்பட்டதை முன் பாகங்களில் நினைவு கூர்ந்தோம். பல்கலைக் கழகங்களுடன் உறவு கொண்டு அவற்றின் கண்டுபிடிப்புகளை அடிகளார் அவர்கள் எப்படி கிராமப்புற முன்னேற்றத்திற்கு பயன்படுத்தினார்கள் என்று பார்த்துவிட்டு மீண்டும் ஆய்வுக்கூடங்களுக்கு வரலாம் என்ற எண்ணம்.

கிராமங்கள் தொடர்ந்து முன்னேற வேண்டுமானால், அந்த முன்னேற்றத்தைத் தக்க வைத்துக்கொள்ள வேண்டுமானால், முன்னேற்றத் திட்டங்கள் வேளாண்மையையும் அதைச் சார்ந்த தொழில்களையும் சார்ந்து இருக்க வேண்டும் என்பது அடிகளார் அவர்களின் ஆழ்ந்த கருத்து. திட்டக்குழுவும் தன் கவனத்தை முழுமையாக இத்திசையில் செலுத்தியது. இதற்கான ஆலோசனையைப் பெற இத்துறையைச் சார்ந்த பல்கலைக் கழகங்களை அடிகளார் அவர்கள் நாடினார்கள். நேமத்தில் தோட்டக்கலை பண்ணையை நிறுவுவதற்கு அடிகளார் அவர்கள் மதுரை வேளாண் கல்லூரியிலிருந்து பலதுறைகளைச் சார்ந்த பேராசிரியர்கள் குன்றக்குடிக்கு வந்து ஆய்வு செய்து செயல்படுத்தக்கூடிய முழுமையான திட்டத்தை தந்து உதவினார்கள் என்று முன்பு குறிப்பிட்டோம்.

இன்று "ஒருங்கிணைந்த பண்ணை" என்று அடிக்கடி செய்தித் தாள்களில் வருகின்றது. தொலைக்காட்சி நிகழ்ச்சிகளில் பேசப்படுகிறது. 1980-ல் அடிகளார் அவர்கள் மைய அரசின் அறிவியல் தொழில்நுட்பக் கழகத்தின் STED (Science & Technology Enterprenourship Development) என்ற திட்டத்தின் கீழ் இளைஞர் பண்ணை என்று 10 ஏக்கர் நிலத்தில் மாதிரியாக ஒருங்கிணைந்த பண்ணை ஒன்றை கிராமத் திட்டக்குழுவின் மூலமாக அமைத்தார்கள்.

பொதுவாக விவசாயிகள் தங்கள் நிலத்தில் ஆண்டிற்கு ஒரு முறை அல்லது இரண்டு முறை ஏதாவது ஒரு பயிர் சாகுபடி செய்து அதிலிருந்து கிடைக்கக்கூடிய (ஆண்டிற்கொருமுறை அல்லது இருமுறை) வருமானத்தை நம்பியிருக்கிறார்கள். ஆகையால் பணப்புழக்கம் தொடர்ந்து இல்லாமல் இன்னல்களுக்கு ஆளாகிறார்கள்.

அதே நிலத்தில் பலவிதமான பயிர்களை பயிரிட்டு தொழில்களை நடைமுறைப்படுத்தினால் விவசாயிகளுக்கு ஆண்டு முழுவதும் தொடர்ந்து வருமானம் பெற வாய்ப்பு இருக்கிறது. இதுதான் ஒருங்கிணைந்த பண்ணையின் அடிப்படைத் தத்துவம். உதாரணமாக நிலத்தை பல பகுதிகளாகப் பிரித்து ஒவ்வொன்றிலும் காய்கறிகள் பயிரிடுதல், பழமரங்கள் வளர்த்தல், கடலை போன்ற எண்ணெய் வித்துக்கள், பயறு வகைகள் பயிரிடுதல், பால் மாடுகள் வளர்த்தல், ஆடு வளர்த்தல், தேனீ வளர்த்தல், கோழிப்பண்ணை மற்றும் முயல் பண்ணை அமைத்தல் என்று பலவிதமான செயல்பாடுகளின் மூலம் ஆண்டு முழுவதும் தொடர்ந்து வருவாய் வரக்கூடிய வாய்ப்பு உண்டாகிறது.

ஒருங்கிணைந்த இளைஞர் பண்ணையில் காய்கறிகள், கடலை, கொய்யா, பப்பாளி போன்றவைகள் பயிரிடப்பட்டதோடு சொட்டுநீர் பாசனம், தெளிப்பான் நீர்பாசனம் போன்ற முறைகள் கடைபிடிக்கப் பட்டது. நீர் மேலாண்மையின் அவசியத்தைி உணர்ந்து, அடிகளார் அவர்கள் மிகவும் இதில் கவனம் செலுத்தினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. நீர் மேலாண்மையின் அவசியத்தை உணர்ந்து அடிகளார் அவர்கள் மிகவும் இதில் கவனம் செலுத்தினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. நீர் மேலாண்மையில் கருத்தரங்குகள் அமைத்து வல்லுநர்களைக் கொண்டு மக்களிடையே இது பற்றிய விழிப்புணர்வை ஊட்டியது குறிப்பிடத்தக்கது. பால்பண்ணையும், தொட்டில் முறையில் ஆடு வளர்ப்பு, கோழி வளர்ப்பு ஆகியவையும் நடைமுறைப்படுத்தப்பட்டது. கால்நடை அறிவியல் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தர் பேராசிரியர் ரிச்சர்ட் மாசிலாமணி தன்னுடைய காரில் உயர்தர முயல்கள் கொண்டு வந்து கொடுத்து முயல் பண்ணையும் ஆரம்பிக்கப்பட்டது. தேனீ வளர்ப்புத் துறை மூலம் தேனீ பெட்டிகள் 50க்கும் மேலாக வைக்கப்பட்டு தேனீ உற்பத்தி செய்யப்பட்டது. இந்த இளைஞர் பண்ணையில் நூற்றுக்கும் மேற்பட்டவர்களுக்கு பயிற்சி அளிக்கப்பட்டது.

பேராசிரியர் ஞானப்பிரகாசம் துணைவேந்தர் ஆனவுடன் காட்டுப் பாக்கத்தில் உள்ள வேளாண் அறிவியல் மையத்திற்கு அடிகளார் அவர்களை அழைத்திருந்தார்கள். அடிகளார் அவர்களும், நானும் காட்டுப்பாக்கத்தில் செயல்பட்ட திட்டங்களை பார்வையிட்டோம். எல்லாத் துறைகளிலும் நவீன தொழில் நுட்பங்கள் கடைபிடிக்கப் பட்டிருக்கின்றன.

அடிகளார் அவர்கள் இம்மாதிரியான ஆராய்ச்சி மற்றும் பயிற்சி மையம் தென்பகுதிக்கு குன்றக்குடியில் அமைக்க வேண்டும் என்ற விருப்பத்தை தெரிவித்தார்கள்.

க்ரிஷி விஞ்யான் கேந்திரா (KVK) என்று சொல்லக்கூடிய வேளாண் அறிவியல் மையங்கள் மைய அரசின் வேளாண் அமைச்சகம் செயல்படுத்தும் திட்டம். இந்த மையங்கள் மூலமாக வேளாண்மை, தோட்டக்கலை, கால்நடை வளர்ப்பு மற்றும் மீன் வளர்ப்புத் துறைகளில் உள்ள நவீன தொழில் நுட்பங்களில் வேளாண் மக்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். (LAB TO LAND என்று சொல்வது போல்) அத்துடன் இத்துறைகளில் ஏற்படும் (நோய்கள் போன்ற) பிரச்சனைகளை ஆய்வு செய்து உதவ வேண்டும். வேளாண் அறிவியல் மையங்களை தொண்டு நிறுவனங்களும், பல்கலைக் கழகங்களும் மைய அரசின் சார்பில் நடத்தி வந்தன. குன்றக்குடி கிராமத் திட்டக்குழுவின் மூலம் வேளாண் அறிவியல் மையத்தை நடத்தலாம் என்ற ஆலோசனை திட்டக்குழுவில் வைக்கப்பட்டது. ஆனால் அடிகளார் அவர்கள் இந்த மையத்தை யார் நடத்துகிறார்கள் என்பது முக்கியமல்ல. இது தென்பகுதி முழுவதும் சிறப்பாக செயல்படவேண்டும். ஆகையால் நாம் அதை கால்நடை அறிவியல் பல்கலைக்கழகத்தின் மூலமாக நடத்தலாம். நாம் அதற்கு வேண்டிய நிலம் மற்றும் அடிப்படை வசதிகள் செய்து கொடுக்கலாம் என்றும் கூறினார்கள். அதன்படி இதற்கான திட்டம் அந்தப் பல்கலைக் கழகத்தின் உதவியால் தயாரிக்கப்பட்டு, அடிகளார் அவர்கள் அதற்கு வேண்டிய நிலத்தை முதற்கட்டமாக 50 ஏக்கர் தருவதாக ஒப்புக் கொண்டார்கள். துணைவேந்தர் ஞானப்பிரகாசம் இத்திட்டத்திற்குப் பெரும் உதவி செய்தார். இத்திட்டம் பல்கலைக் கழகத்தின் மூலமாக வேளாண் அமைச்சகத்திற்கு அனுப்பப்பட்டது. அப்பொழுது வேளாண் அமைச்சராக திரு. பல்ராம் ஜாக்கர் என்பவர் இருந்தார்கள். நமது மாண்புமிகு திரு. ப. சிதம்பரம் அவர்கள் அப்பொழுது மைய அரசின் உள்துறையில் மாநில அமைச்சராக இருந்தார்கள். அடிகளார் அவர்கள் திரு. ப. சிதம்பரம் அவர்களிடம் இத்திட்டத்தைப் பற்றி கூறி நமது மாவட்டத்திற்கு வேளாண் அறிவியல் மையத்தை கொண்டுவர வேண்டுமென்றும் அதற்கு அவர்களும் பரிந்துரை செய்ய வேண்டுமென்றும் வேண்டிக் கொண்டார்கள்.

ஆனால் கடும் போட்டியின் காரணமாக இந்தத் திட்டம் உத்திரபிரதேசத்திற்கு கொடுக்கப்பட்டுள்ளது என்றும், எப்படியும் வரும் ஆண்டுகளில் முயற்சி செய்து சிவகங்கை மாவட்டத்தில் வேளாண் அறிவியல் மையத்தை அமைத்து விடுவோம் என்றும் திரு. ப.சிதம்பரம் அவர்கள் தெரிவித்தார்கள்.

(தொடரும்)

## இப்படி இருங்கள்!

(கவிவேந்தர். **கா. வேழவேந்தன்**)

ஈக்களிலே தேனீயாய் இருங்கள்; ஆனால்
என்றைக்கும் "குளவி"களாய் மாறா தீர்கள்!
பூக்களிலே "முல்லை"யைப்போல் இருங்கள்; ஆனால்
பொழுதுக்கும் "எருக்கம்பூ" ஆகா தீர்கள்!
காக்கின்ற "பசு"வாக இருங்கள்; ஆனால்
கவிழ்கின்ற "நரி"யாக மாறா தீர்கள்!
"தேக்"கைப்போல், "தென்னை"யைப்போல் இருங்கள்; ஆனால்
சீரழிக்கும் "எட்டி"யென மாறாதீர்கள்!

காற்றினிலே "தென்ற"லைப்போல் இருங்கள்; ஆனால்
"கடும்சூறை"யாய் மாறி அழிக்கா தீர்கள்!
ஊற்றெடுக்கும் "ஆற்"றைப்போல் இருங்கள்; ஆனால்
உயிர்தீய்க்கும் "எரிமலை"யின் குழம்பா காதீர்!
மாற்றமிலா "மண்புழு"ப்போல் துணைநல் குங்கள்!
"மலைப்பாம்"பாய் மற்றவரை விழுங்கா தீர்கள்!
ஏற்றமிகு "பாரி"யைப்போல் இருங்கள்; என்றும்
இரக்கமிலா "இட்ல"ரைப்போல் இருக்கா தீர்கள்!

## சிக்குன் குன்யா நோய்க்கு மருந்து

சிக்குன் குன்யா நோய்க்கு மருந்தாகும் வேப்பிலை. 42 ஆண்டுகட்கு முன்பாகவே இந்நோய் பலரையும் பாதித்து உள்ளது. தினமணி நாளிதழ் 27.9.1946ல் இந்நோய் பற்றிக் குறிப்பு வந்துள்ளது. வைரசால் ஏற்படும் அம்மை நோய்க்கு நாம் வேப்பிலையும் மஞ்சளையும் அரைத்து தடவலாம். காய்ச்சல், விடாத மூட்டுவலி ஆகியவைகள் நோயின் அறிகுறிகளாகும்! இந்நோயினால் பாதிக்கப்பட்டவர்கள் வேப்பிலை கொழுந்து 10, முற்றிய வேப்பிலை 10, கீழாநெல்லி இலை 20 சேர்த்து அரைத்து தினசரி காலையில் வெறும் வயிற்றில் சாப்பிட்டு வெந்நீர் சாப்பிடவும். இது போல் காலை, மாலை வெறும் வயிற்றில் 5 நாட்கள் 10 வேளைகள் சாப்பிடவும். வலி உள்ள மூட்டில் வேப்பிலை 20 மஞ்சள் பொடி 5 கிராம் சேர்த்து அரைத்து தடவி வரவும். இந்நோய் குணமாகும்.

- மரு. **த.கோ. மணிவாசகம்**, தேவூர் - 611 109.

# சிந்தனை வட்டம்

"அருளார்ந்த அடிகளாரின் தலையங்கக் கட்டுரையில் "ஒட்டுமொத்தத் தமிழகத்தையும் சமத்துவபுரமாக உயர்த்தும் இலட்சியத்தில் இரவு பகலாக உழைக்கும் முத்தமிழறிஞர் முதல்வர் கலைஞர்" - என்று எழுதிக்காட்டிய வரிகள் பொன்னேட்டில் பொறிக்கத் தக்கவை. உண்மையில் திருமாவளவன் பார்வையில் மட்டுமன்று; எல்லார் பார்வையிலும் கலைஞர் சமத்துவப் பெரியாரே! ஏனெனில் சைவத்திருமடத்தின் அதிபராக இருந்து கொண்டு கலைஞர் தமிழ்நாட்டைச் சமயபுரமாக்குகிறார் எனக் கூறாமல் சமத்துவபுரம் ஆக்குகிறார் என்ற அடிகளார் எழுத்தா? அது! உண்மையில் பொன் எழுத்து! ஆம் பொன்னம் பல எழுத்து!

நாவரசர் பழமொழித் தொகுப்பு அருமை. மா. பட்டியப்பனாரின் வேள்விச் சாலையின் பைந்தமிழ்க் குறிப்பு எங்கும் பரவவேண்டும். பலன்தரும் பதிகங்களைப் படித்தும் அச்சிட்டும் கொடுக்கும் தமிழர்கள் அருச்சகரிடம் தமிழில் ஒரு திருமுறை பாடலும் சொல்லி விளக்கைக் காட்டுங்கள் என்பதில் துணிவு இல்லாததோடு உள்ளார்ந்த நம்பிக்கையும் இல்லாதவர்களாகவே உள்ளனர்".

-தமிழாகரர். **தெ. முருகசாமி**
புதுச்சேரி.

"அக்டோபர் இதழில், குழந்தைத் தொழிலாளர் பற்றிய உருக்கமான தலையங்கம் தங்களின் அற்புதச் சமுதாயப் பொறுப்புணர்வினை வெளிப்படுத்தி மெய்சிலிர்ப்பூட்டியது.

"மழலையர் மலர்கள்; அவர்களைக் கசக்கிவிடாதீர்கள். குழந்தைகள் தெளிந்த நதி; மாசுபடுத்திவிடாதீர்கள்" என்ற தங்களின் நேய உணர்வு ததும்பும் தொடர்கள் தங்களின் இமய உள்ளத்தைத் துல்லியமாக வெளிப்படுத்தின. போற்றுகின்றேன்.

பிற கட்டுரைகளும் கவிதைகளும் சிந்தைக்கு விருந்து நல்கின."

-கவிவேந்தர். **கா. வேழவேந்தன்**

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது
# பழநி

## பரிமள விலாஸ்

# S. சித்தனாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தனாதன் சன்ஸ்**
**அடிவாரம், பழநி — 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின் அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருட்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!






**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - December 2006 Price Rs. 5-00
Date of Publication 20-12-2006
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008






பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி) அவர்கள்




அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166